[24th March 1961

THE HON. SRI R. VENKATARAMAN : I do not think the suggestion is feasible. There are slums because there is overcrowding. Unless overcrowding is removed, this cannot be improved.

SRI K. B. S. MANI : சேரி ஒழிப்பின் மூலமாக வேறு இடங்களுக்கு அப்புறப்படுத்தப்படும் தொழிலாளர்கள் பாதிக்கப்படுகிறார்கள் ; அது அதிக தூரத்தில் அமைந்தால், தொழில் நிலையத்திற்குப் போக வர அவர்களுக்கு கஷ்டம் ஏற்படுவதால் அம்மாதிரி இடங்களுக்குப் போக மறுக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களுக்கு சமீபத்திலேயே, சுகாதார வசதிகளோடு கூடிய கட்டிடங்களைக் கட்டிக்கொடுக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ? அந்த முறையில் சேரி ஒழிப்புச் செய்யப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : சேரி ஒழிப்புக்காக வேறு இடங்களில், திறந்த வெளியிலே, குறைந்த வாடகையில், மாதம் 3 ரூபாய் என்று போட்டு, பாத் ரூம், ப்ளஷ் ஔட் போட்டுக்கொடுத்தால், அது தொலைவில் இருக்கிறது என்று போகமாட்டோம் என்கிறார்கள். அவர்களுக்குப் பக்கத்தில் கட்டிக் கொடுத்து, வாடகை ரூ. 10 என்றால், அது அதிகம் என்று போகமாட்டோம் என்கிறார்கள்.

SRI K. PERIANNAN : தற்போது எந்தெந்த ஜில்லாவில் இந்த சேரி ஒழிப்புத் திட்டம் அமுலில் இருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுது இல்லை; மூன்றாவது திட்டத்தில் என்று சொன்னேன்.

SRI N. MARUDACHALAM : சேரி ஒழிப்பு கோவை நகரத்திற்குக் கொண்டு வரப்படுமா ? அப்படிக் கொண்டு வர எவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது?

THE HON. SRI R. VENKATARAMAN : கோவை நகரமும் கூட சேர்க்கப்பட்டிருக்கிறது. இது மெட்ராஸைப் பொருத்த கேள்வி.

*Beating of one Chockalingam (Central Jail, Tiruchirappalli).*

* 1044 *Q*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 24—11—60-ல் திருச்சி மத்திய சிறையில் பஞ்சாயத்து போர்டு அங்கத்தினரான சொக்கலிங்கம் என்பவரை ஜெயில் அதிகாரிகள் தடியால் தாக்கி காயப்படுத்தியது உண்மையா ?

(இ) காரணமென்ன ?

(உ) தாக்கியவர்களின்மேல் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) & (*c*) Do not arise.

SRI V. K. KOTHANDARAMAN : திருச்சி மத்திய சிறையில் சொக்கலிங்கத்தை தாக்கிக் காயப்படுத்தியதாக அமைச்சருக்கும், அதிகாரிகளுக்கும் பல புகார்கள் அனுப்பப்பட்டிருக்கின்றன. ஆகவே, மீண்டும் பரிசீலனை செய்து, தக்க நடவடிக்கை எடுக்கப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அரசாங்கத்திற்கு வரவில்லை. அதிகாரிகளை விசாரித்ததில், புகாருக்கு ஆதாரம் இல்லை என்று தெரிந்தது. 24-ம் தேதி என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அன்றைக்கு அவர் சிறைக்கே வரவில்லை; பின் தேதியில்தான் வந்தார். சிறையில் அவருக்கு வைத்திய

24th March 1961]

சிகிச்சையும் அளிக்கப்படவில்லை. காயப்படுத்தியதாகச் சொல்லப்பட்டிருப்பது தவறு. இப்பொழுது அவர் வெளியில், ஜாமின் விடுதலையில் இருக்கிறார்.

*Harijan Colony (Melpuzhidiyur)*

*1045 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) செங்கம் தாலுகா மேல்புழுதியூரில் ஹரிஜன காலனி கட்டுவதற்காக எவ்வளவு பணம் ஒதுக்கப்பட்டது ?

(இ) அது கட்டி முடிக்கப்பட்டதா? இல்லை என்றால் காரணமென்ன ?

THE HON. SRI P. KAKKAN : (அ) A sum of Rs. 7,700 by way of subsidy and Rs. 2,800 as interest-free loan have been allotted for construction of a housing colony in Melpuzidiyur.

(இ) The construction has not yet been completed. There has been some delay in the execution of the works, as the beneficiaries, who have chosen to use at their own cost, costlier materials and effect improvements not provided for in the approved estimates, are trying to find additional funds to complete the works.

SRI V. K. KOTHANDARAMAN : இந்தக் காலனியைக் கட்டுவதற்கு வேண்டி இதை ஏற்றுக்கொண்ட அந்த நபர் செங்கல் சூளை போடுவதற்காக புறம்போக்கிலுள்ள ரூ. 2,000 பெருமான புளிய மரங்களை வெட்டியிருக்கிறார்களா ? அவர்களிடமிருந்து அந்தப் பணம் வசூலிக்கப்பட்டதா ?

THE HON. SRI P. KAKKAN : காலனி கட்டுவதற்காக அங்குள்ள மரங்களை வெட்டியிருக்கிறார்கள். இதற்காக அவர்கள் ஆயிரம் ரூபாய் கொடுத்திருக்கிறார்கள்.

*Case against a Sub-Inspector of Police (Coimbatore)*

* 1046 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether it is a fact that a Police Sub-Inspector in Coimbatore district seduced a college girl; and

(*b*) if so, the action taken against him?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) The Sub-Inspector of Police was prosecuted for offences under sections 366, 323 and 376, Indian Penal Code. The Sessions Judge, Coimbatore, acquitted the accused giving him the benefit of doubt.

SRI A. A. RASHEED : Sir, is there any proposal to appeal against the judgment ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Government have been advised by the Public Prosecutor that there was no case for appeal, but some departmental action has been taken against him. The proceedings are pending.

SRI K. VINAYAKAM : Is the incumbent still in service? On the grounds of equity will he be removed from service?